# திருக்காரிகரை

[ச. சச்சிதாநந்தம் பிள்ளை]

## பண் : பழம்பஞ்சுரம்

வித்தா ரக்கான்† வியன்திரியும்‡ விளங்குக் காரிக் கரையுறை வாய்!, அத்தா! பலவாண்டாயடியேம் அறியா திருந்தோம் கினை அந்தோ!, கொத்தார் குழலாள் உமைபங்கா! கோவே! சுயம்பாம் கோலத்தாய்!, பித்தா! பித்தர் பெருமானே! பிழைதீர்த் தெமை யாட் கொள்வாயே. (1)

கொள்வார் கொள்ளும் பொருளெல்லாம் கொடுத்தே வளர்க்கும் கொள்கையினாய்!, வள்வார் முரசின் ஒலியதிர்க்கும் வளகின் றியலும் வாழ்க்கையினாய்!, கள்வார்§ கொன்றை காபாலம் கனிந்தேல் காரிக் கரையுடையாய்!, விள்ளா அன்பிங் குளததனை விள்ளச் செய்தே வீடருளே. (2)

அருளா ராட்சி அநபாயன் அவன் முன்னோர்கள் அரும்பணி கொண்டுருவாங் கோயில் கொண்டானே! உருவங் குலைதல் ஒல்லுவதோ?$ திருவார் காரிக் கரைப்பேரும் திரிந்தே ராம கிரியான (அ), இருமா குறைபு முடன் தீர எந்தாய்! இன்னே பணியாயே. (3)

பணிவார் பாவம் பாற்றவல்லாய்! பாம்பும் மதிகொள் பகை தீர்ப்பாய்!, திணிவார் தெலுங்கும் தீந்தமிழும் சேரும் காரிக் கரை மறையோய்!, அணியார் நந்தி யதன்வாய்க்கீழ் அழகூற் றென்றும் அருவுதல்போல், மணியார் சிவனே! மானசவம் மன்னிப் பெருக வரநல்கே. (4)

நல்லார் பரவும் சம்பந்தன் நாவுக் கரையன் நத்திவரும்
கல்லார் காரிக் கரையுடையாய் ! கவினா ரிலிங்க மலையுடையாய்!
அல்லார் கண்டத் தருளுடையாய் அவனிப் பெரும்போ ரொழிந்தன்பின்
வல்லார் மாட்டார் யாவருமே மகிழ்ந்து வாழ வேண்டுவனே. (5)

---

† விஸ்தாரம் கான் - பரந்த காடு.
‡ உயர்ந்த மலை.
§ தேனைச் சொரிகின்ற.
$ பொருந்துவதோ - பொறுக்கத் தக்கதோ.

---

சித்தாந்தம் - 1944 ஆ - ஜுன் மீ